மிசைத்தாய் செங்கை, அறைகோலி யையுந்தொடியார் வேள்சினி முருகனெனும் அருள்மிக் கோனே. (௩௫)

* தண்டலைசூழ் சிவகங்கை நகரபரி பாலனமே தலைமை யாகக், கொண்டிருக்கும் யூனியனை நியமெழித்துச் சுகாதாரங் குலவச் செய்தாய், அண்டிபல் லோர்க்குதவுந் தாலூகாப் போர்டுமெம்பர் ஆசப் பெற்றாய், பண்டுநின்போற் புகழ்பெற்றா ரெவர்சினி முருகனெனும் பண்புற் றாயே. (௩௬)

* இக்கணையோ மதுரைச்சில் லாப்போர்டு மெம்பரென இலங்குகின்றாய், உத்தமமா மகம்படியர் குலச்சபையூர் தொறுங்கூட்டி யொழுங்கு மேவ, வைத்தவற்று ளுபர்சில்லாச் சபையிலக்ரா சனாதிபதயம் வகித்து நாளும், புத்திபுகன் றிலங்குகின்றா யுயர்சினி முருகனெனும் புண்ய வானே. (௩௭)

* திருப்பாம்ப னகர்ப்பால சுப்ரமண்யர் திருக்கோயில் சிறப்ப வாற்றி, விருப்பாகக் கும்பாபி ஷேகமுஞ்செய் தவன்றமிழின் வேட்கை மேவி, இருப்பானென் றொருசிந்து பாடுவித்துச் சிவகங்கை யெனுந்தா லூகா, ஒருப்பாடு பெறும்போர்டில் உபாக்ராச னாதிபத்யம் ஓங்கப் பெற்றாய். (௩௮)

*அன்னையிலார்க் கன்னையாகி யையனிலார்க் கையனே யாகி யன்பு, நனிமருவி வாய்க்குணவுஞ் செவிக்குணவு நாடோறு நல்கா நின்றாய், கனியுமனக் கருணையுளாய் புவிமுழுதுந் தலைவணங்குங் கன்யம் பெற்றாய், இனியுனக்கு நிகராவா ரெவர்சினி முருகப்பேர் இலக்குங் கோவே. (௩௯)

எல்லவர்க்கு முபகார வியல்நீதி விபகார னெவரு மெச்ச, வல்லவக்கி லதிகாரன் வழங்கிபெருந் தாகாரன் மடவார் மையல், புல்லவரு மலங்காரன் பொருந்தலரைச் சங்காரன் புவனமெல்லாஞ், சொல்லமலி புகழ்ச்சினி முருகனே விரைபெடுத்துச் சொல்லற் பாற்றே.

* விண்மணிபோ லுலகமெலாம் விளங்குபெருந் தகைமகிபா வேந்த ரெல்லாங், கண்மணிபோற் கொண்டாடுங் கனம்பெற்றாய் மதப்பினிற்றுங் கமல வாழ்க்கைப், பெண்மணிகள் விளையாடும் பெருஞ்செல்வம் பெருங்கல்வி பெற்றாய் வானில், எண்மணியா னிதியனை யெழிற்சினி முருகனெனும் எந்தல் நீயே. (௪௧)

* வேயிருக்குந் தோண்மடவார் மதன்சினி முருகனெனும் வேளே யாண்டுந், தாயிருக்க மக்கள்துயர் சார்வதிலே யதுபோலத் தமிழ்வல் லோனும், நீயிருக்குந் தனையுமெனக் கொருகுறையு மில்லையிது நிசங்கண் டாயென், வாயிருக்கும் வரையுமுனைப் புகழுமுன் போற் பலசிறப்பும் மருவும் வாழி. (சஉ)

இரங்கோன் ராயபஹதுர் ஸ்ரீமாந்- பெ. மா. மதுரைப்பிள்ளை அவர்கள் மீது பாடியன.

*தருமதுரை மிகப்பொழியும் வளத்திரங்கோன் புரக்குமுயர் தகுதி வாய்ந்த, தருமதுரை பேயெனக்கா வெனப்பகரும் புலவரை வித் தகபா னிற்குத், தருமதுரை யெனவினவி நினைத்தவெலாந் தந்தருளத் தருவான் போற்போ, தருமதுரைப் பிள்ளையென வின்னு பெயர் கொள்ளுமுயர் தமிழ்க்கோ மானே. (சந)

*மெய்பறிவுச் சட்சிகளும் வியன்கலைக்கட் டருநீதி விளக்குஞ் செங்கோற், கையர்மதி கவர்னருமெக் காலுமதி மதிப்பாகக் கருதலாலே, வையகமன் னவர்வியந்து ராயபக தூர்ப்பட்டம் வனையப் பெற்றேய், செய்யபுகழ் ஆனரரி மாஜிஸ்ட்ரேட் டதிகாரச் சிறப்புமுற்றேய். (சச)

*கல்வியாற் சேடனையுங் கனநிதியாற் குபேரனையுங் கணிப்பக்கஞ்சச், செல்வியா ரிருவரையுஞ் சேர்த்திசைநீ ருடைபுனைந்த தேய மெல்லா, நல்வியா பகம்பெறுமா றின்னுரையுங் கடவுளன்பு நன்னு மேலோய் தொல்வியா ழனைநிகரும் மதிவல்லிசேர் தருமதுரைத் துரையே கேண்மோ. (சரு)

*எந்நாளுந் தமிழ்ப்புலவர்க் கிடனுதவிக் காத்திசைகொ ளிபத்தை நின்பேர், சொன்னாலுங் கேட்டாலு நினைத்தாலு மெவரகத்துந் தோன்ற நின்சீர், பன்னரு முரைப்பரன்றே நின்னலே நூலறிவு பண்புற் றேனுன், பொன்னாரும் புகழ்புகழா நாளறியே னிதிற் சிறிதும் புதுமை யின்றே. (சசு)

* பாலளித்த தாய்நிதியென் பாலளித்த தந்தையிவர் பண்பார் நன்றி, போலளித்த தோநினது புனிதகபை பரத்தலம் பொருந்[...] கல்வி, நாலளித்த சகையதன்றே நின்னைமறந் தறியேனோ [...]

போ தேனுஞ், சேலனித்த விழிமடவார் மடலெழுது மெழின்மதுரைத் திருப்பேர் வள்ளால். (௪௭)

*ஒன்றிருக்கு மெழின்மதுரைத் தமிழ்ச்சங்கச் சிரமியா ரில்லையிது, நின்றிருக்கும் புகழ்கினது திருப்பெயரை முதற்புனைந்த நீராலென்னுன், மூன்றிருக்கு மன்பெழுப்ப வன்னதன்மான் மியத்தமிழ்நான் மொழிந்தேன் காண்பல், னான்றிருக்கு நினக்குரிய திகைப்பெறுதி மதுரையெனு மரச ரேறே. (௪௮)

*வாரிதிகன் னிரெடுத்த வருணனுக்குப் பூசைபுரி வழக்கா றேய்ப்பர், சிறநீரு பயிற்றுவித்த செந்தமிழி லொருநூலைச் செய்தேயின்றுன், பெருமமா றலிக்கேத்த விரும்பியெந்நால் புகறுமெனப் பேனி யாய்ந்தேன், கூரியமா மதிப்புலவர் பிரபந்தம் பலவுநிற்குக் கூறக் கண்டேன். (௪௯)

*நினக்கொருவ ரிதுவரையு நிகழ்த்தாநா லெதுவென்ன நேடி கேடி, மனக்கொளுங்காற் சலம்பகமே யெஞ்சியிருந் ததுபெரிது மகிழ்ச்சி மேவிக், கனக்குநிகர் நீயேற்ப வகைப்பகர்ந்து கொடுப்ப மிகக் காதல் பூண்டேன், எனக்குனது சம்மதிதந் திடல்வேண்டு மதுரைமன்ன னென்னுங் கோவே. (௫௦)

*நல்லதிதற் குத்தரவு வேண்டுவதென் னெனக்கருதே ஞருகாரு, மெல்லவர்க்கு மீவதலா லேற்றறியா நீயிந்நா லேற்பா யென்று, சொல்லவரு தனின்முறையா முத்தரவு கிடைத்தவுடன் சொல்லி னின்பால், வல்லவரு குவன்கண்டாய் மாமதுரைப் பிள்ளையெனும் வள்ளாற் கோவே. (௫௧)

ஆகச்செய்யுள் ௩௯௨௧.

---

## ஜி. சதாசிவப்பிள்ளை.

இவர் சோழநாட்டில் பூண்டிநகரில் "விஞ்சைராயர்" என்ற பட்டங் கொண்ட ருத்திர வகுப்பிற் பிறந்தவர். இளமையிலேயே திருவாவடுதுறை ஆதீனத்தையடுத்து பழனிக்குமாரத்தம்பிரானவர்களிடம் தமிழிலக்கிய இலக்கணநூல்களைக் கற்றுக்கொண்டு நாகைக்கு வந்து அந்தோணி ஐஸ்கூல் தமிழ்ப்பண்டிதராயினர். நாகை நீலலோசனி என்ற தமிழ்ப்பத்திராதிபராயிருந்து வாரமொருமுறை பத்திரிகையை நடத்திவருகின்றார். ஷை பத்திரிகை சேதுபதியவர்களாலும், மடாதிபதிகளாலும், நாட்டுக்கோட்டை

நகரத்தார்களாலும், மற்றும் பலராலும் ஆதரிக்கப்பெற்று வருகிறது. சமயோசிதமாகக் கவிபாடுந்திறமுற்றவர். இப்போது 35-வயசிருக்கலாம்.

பாஸ்கரசேதுபதி மகாராஜா அவர்கள் நீலலோசனிப் பத்திராசாலைக்கு வந்தபோது கூறியன.

* சீர்படைத்த கல்வியறி வொழுக்கமுதற் பல்குணங்கள் சிறக்க வாழ்வோன், கார்படைத்த மெய்த்திருமால் மிகையெனப்பல் லுயிர்புரக்குங் கருணை யாளன், தேர்படைத்த முகவைநகர் தனிலிருந்திவ் வுலகமெலாஞ் செங்கோ லோச்சும், நேர்படைத்த பாற்கரரா ஜேந்திரனே விண்ணப்பம் நேர்ந்து கேட்க. (க)

* பலம்படைத்த அரசருண்டு படைபடைத்த அரசருண்டு பகரொ ணாதை, நிலம்படைத்த அரசருண்டு நிதிபடைத்த அரசருண்டு நீணி லத்தில், நலம்படைத்த மூர்த்திதலம் தீர்த்தமிவை நாடுனர்க்கு நலகும் புண்யக், குலம்படைத்த அரசருண்டோ வுனையன்றி யார்படைத்தார் குணக்கோ மானே. (உ)

* கதிபடைத்த காசியிரா மேச்சுரயாத் திரைமுடித்தோர் கருதா நின்ற, துதிபடைத்த தவப்பலன்மூன் நினதுதரி சனமிலையேற் றெடரா தென்பார், நதிபடைத்த சடைநம்ப ராலயத்தை வணங்கிடினும் நற்சன் டேசர், விதிபடைத்த திருவடியை வணங்காக்கா லென்பலனே வேந்த ரேறே. (ங)

* அருள்படைத்த அச்சிறப்பை அருஞ்சிறப்பாக் கொண்டமரும் அரச ரேறே, தெருள்படைத்த நீயிருக்கும் இடந்தேடித் தெரிசியாச் சிறியே முள்ள, மருள்படைத்த இடம்நாடி வந்துதரி சனந்தந்து வாழ்வித் தாயிப், பொருள்படைத்த எமைப்போலும் புண்ணியருண் டோவுலகிற் புகலுங் காலே. (ச)

* சேய்படைத்த கன்றுள்ளித் தேடிவந்த பசுவென்று செப்புவோமோ, காய்படைத்த பயிர்நினைந்து கடுகிவந்த முகிலென்று கழறு வோமோ, வாய்படைத்த புலவரெலாம் வளம்படைத்துப் புகன்றிடும் வரையொ ணாத, காய்படைத்த அன்புடைய சேதுபதி நின்வரவு தனைநாக மாமோ. (ரு)

தேவிகோட்டை ஸ்ரீமாந். அரு. அரு. சோம. சோமசுந்தரம் செட்டியாரவர்களின் நூதன கிரகப்பிரவேசப் புகழ்ச்சிக்கவிகள்.

* சீர்பூத்த தேவைநகர் செழிக்கவந்த திருவாளன் சீர்த்தி மே... ங்கும், பேர்பூத்த சித்தாந்த சைவமே பெரிதென்று பேணி...

வோன், தார்பூத்த சோமசுந் தரமகிபன் திருமனையைத் தரணி போ
ற்றும், ஏர்பூத்த திருமங்கை யெழிற்பதும மனையென்றே யியம்ப
லாமே. (௬)

* தென்பாண்டி நாட்டாளன் திருத்தேவைப் பதியாளன் செ
ழுஞ்சை வத்தின், இன்பாள னிசையாளன் எழிலருணா சலவள்ள
லீன்ற செல்வன், அன்பாள னருளாளன் சோமசுந் தரமகிபன் அற
மேயோங்குந், தென்பாளன் திருமனையைத் திருமகள்வாழ் பாற்கட
லாச் செப்ப லாமே. (௭)

*தஞ்சைத் தமிழ்ச் சங்கத்தின் நான்காம் வருஷ மகோற்சவ
காலத்தில் கூறியன.*

* மூவேந்தர் தமிழ்நாட்டை முறைபுரிந்த மும்முறையும்
முதன்மை யான, பாவேய்ந்த தமிழ்ச்சங்கம் பாண்டியரே நிலைநிறுத்
தும் பான்மை பெற்றார், நாவேய்ந்த இம்முறையும் நான்காவ தாஞ்
சங்க நாளு மோங்கக், காவேய்ந்த கரதலத்தென் காவலன்பாண் டித்
துரையே கருதிச் செய்தான். (௮)

* முச்சங்க நாட்களிலே யோரவையு முந்நான்கின் முளைத்த
துண்டோ, கைச்சங்க மால்பொன்னுச் சாமிநரேந் திரன்தவத்துங்
காளை யான, மெய்ச்சங்க முறம்பாண்டித் துரைஸாமி தருமதுரை
விதித்த நான்காம், இச்சங்க நாட்களிலே யெழிற்றஞ்சைத் தமிழ்ச்
சங்க மெழுந்த தம்மா. (௯)

* அன்றியும் பாண்டியர்க ளப்பதிவிட் டெப்பதிபோ யருளி
னாலே, துன்றியச பாபதியாய்த் துலங்கினர் இப்பாண்டித் துரை
யோ வென்னில், மன்று நிறை பதியாகி மழைபோலுந் தமிழமுதம்
வழங்கா நின்றான், நன்று நிறை பாண்டியரி லிப்பாண்டித் துரைநன்றி
நன்ற தாமே. (௧௦)

*மத்தியார்ச்சுனம் ஸ்ரீ பிருகத் சுந்தர குஜாம்பிகை கும்பாபிஷேக
மஹோற்சவத்தின் போது பாடியது.*

* தேன்மன்னு கழுநீர் மலர்த்தொங்க லான்கருணை திருமேனி
கொண்ட மேலோன், திசைமன்னர் தவமன்னர் கவிமன்னர் முடிவ
[illegible]தி திருவடியை யுடைய கோமான் வான்மன்னு கைலைவிட் டிவ்வுல
[illegible] வந்த தெய்வம், வளமன்னு வெண்ணெய்

மெய் கண்டனர் திருமரபு வாழ்வோங்க வந்த ரத்னம்; தான்மன்னு சைவசித் தாந்தோப தேசசற் குருராஜராஜேந் திரன், தருமமே குடிகொளம் பலவாண தேசிகன் தன்றிருவு ளத்தி னய்ந்தே; கோன்மன்னு பிருகத்சுந் தரகுசாம் பிகைதிருக் கோயிலைப் புதுமை யாக்கிக், கும்பாபிஷேகந்னி செய்துதன் புகழைப் புதுக்கினன் வாழி மாதோ.

திருவாவடுதுறையில் பாலக்காட்டு ஸ்ரீ. அனந்தராம பாகவதர் திருநாளைப் போவாரின் கதாப்பிரசங்கம் செய்து முடித்த காலத்தில் கூறிய கவி.

* ஒருராமன் கதையேயிவ் வுலகமெலா மின்றளவு முவந்து கூறும், குருநாதன் கோகழியம் பலவாண குணநாதன் கொண்மூ வென்னத், தருநாதன் றிருமுன்பு தானனந்த ராமனென்னுந் தக்கோன் செய்த, திருநாளைப் போவாரின் கதைத்திறத்தைச் சிறியேனே செப்ப வல்லேன். (கஉ)

சேதுசம்ஸ்தான சங்கீத வித்துவான் ஸ்ரீ சீனிவாசையங்காரவர்கள் திருவாவடுதுறை மடத்திற் சங்கீதம்பாடிய காலத்திற் கூறியது.

* விறகெடுத்தாய் பலகையிட்டாய் வியன்பொருளைக் கொள்ளை கொண்டு விருபபித் தந்தாய், நறையடுத்த பாத்தொடுத்து நன்னிதியம் பாணனுக்கு நல்கச் செய்தாய், துறையடுத்த கோகழியம் பலவாண துங்கிதியே தூய்மை யான, நிறையடுத்த இசைதனக்கே நீ பட்ட பாட்டையென்ன நிகழ்த்து வேனே. (கங)

பாஸ்கர சேதுபதியவர்கள் தங்கத்தோடாவும், கர்னபூஷணமும் மோதிரமும் சால்வை பீதாம்பரங்களும் அளித்த காலத்தில் கூறியது.

* தாயனைய பாற்கரனே தமியேற்கு நீசெய்த தயவை யார்க்கும், வாயொன்றே சொல்லுவதென் வயிறுமிகத் தான்சொல்லும் வலக்கை சொல்லும், சேயொளிரென் விரல்சொல்லுந் திகழுமிரு செவிசொல்லுஞ் செவ்வி தாக,ஓயாதென் னிடைசொல்லும் ஒய்யார நன்னடையு முணர்த்துந் தானே. (கச)

ஸ்ரீ முத்துராமலிங்க சேதுபதி மகாராஜா அவர்களின் திருக்கல்யாண மகோற்சவத்தைப்பற்றி நாகை வெளிப்பாளையம் சைவ சித்தாந்த சபையில் வாழ்த்திய கவிகள்.

* உலகமெலாம் ஒளிபரப்பி உயிரையெலாங் காத்துவரும் ஒருவ னென, இலகுறுநல் ரவிகுல தீபமென்றே யெல்லோரும் இனி

வாழ்த்தும், அலகில்புகழ்க் கொடைத்தடக்கை யண்ணல்பாற் கரராஜன் அருந்தவத்தில், நிலவுமுத்து ராமலிங்க சேதுபதி சேதுவுடன் னெடிது வாழ்க. (௧௫)

* சேரமான் பெருமான்போல் செகம்புரந்த சைவமன்னன் செழித்த பாவின், ஆரமார் பாற்கரப்பே ரண்ணல்தவப் பாற்கடலி லமுதம் வீசும், ஈரமார் திங்களென எழுந்தமுத்து ராமலிங்க ராஜராஜன், தாரமாம் சேதுதிரு நாச்சியா ருடனென்றுந் தழைத்து வாழ்க. (௧௬)

* வருணபாண் டியன் போல மாநிலமே லாங்காத்த வண்மையாளன், தருமமே வடிவெடுத்த பாற்கரப்பேர்ச் சைவமணி தவந்திரண்ட, அருமைமிகு மெங்கள்முத்து ராமலிங்க சேதுபதி யழகுமிக்க, உரிமைமிகு சேதுதிரு ராணியுட னென்றென்றும் உவந்து வாழ்க. (௧௭)

* மும்மையாலுலகாண்ட மூர்த்தி யெனத் தமிழ்நாட்டை முறை புரிந்த, செம்மை சேர் பாற்கரப்பேர்ச் செழுஞ்சைவ சித்தாந்தச் செல்வ னீன்ற, மெய்ம்மைசே ரெங்கள்முத்து ராமலிங்க சேதுபதி வேந்தன் நல்ல,அம்மையாம் சேதுதிரு நாச்சியா ருடனென்றும் அவனி வாழ்க. (௧௮)

* சேதுபதி தரிசனமே ராமலிங்க தரிசனமாச் செகங்கொண்டாடும், ஆதிபதி பாற்கரப்பே ரரியபெருஞ் சைவபதி யன்பாய்ப் பெற்ற, நீதிபதி யெங்கள்முத்து ராமலிங்க சேதுபதி நேய மிக்க, மாதுபதி சேதுதிரு மங்கையுட னெந்நாளும் வாழ்க வாழ்க. (௧௯)

திருவாவடுதுறை மகாசந்நிதானம் ஸ்ரீமத் அம்பலவாணதேசிகமூர்த்திகள் நாகபட்டினத்திற்கெழுந்தருளியகாலத்திற் கூறியகவிகள்.

* சீராருங் கைலைபெறுஞ் செழுமலைநோற் றடைந்தபெருஞ் சிறப்பை யிந்தப்,பாராருஞ் சோணாடு பன்னாண்முன் செய்தவத்தின் பயனே யென்னப்,பேராரு மாவடுதண் டுறையென்னும் பெரும்பதியும் பெறுவான் வேண்டிக்,காராருங் கண்டமுடைக் கண்ணுதல்தன் திருவுளத்திற் கருதி மாதோ. (௨0)

* புலியெடுத்த வுடைமறைத்துப் பொற்காவி யுடையுடுத்து [illegible]த்தெனெப், பலியெடுத்த கலமறைத்துப் பரவுசிவ ஞானமுறை

பரிப்போ னாகி, யலையெடுத்த கலைமறைத்தவ் வறுபத்து நான்குகலை யமைந்தா னாகி, யிலையெடுத்த விதழிமறைத் தெழிற்கமுநீர் மாலையி லை யியைந்தா னாகி. (உக)

* கனல்வழியுங் கண்மறைத்துக் கருணைவழிந் தொழுகுமிரு கண்ண னாகி, யனல்வழியு மழுமறைத்தவ் வபயகர மிரண்டுடைய வ ம்மா னாகிச், சினம்வழியும் விடைமறைத்துச் சிவிகையினி லேறிவரு செல்வ னாகிப்,புனல்வழியுஞ் சடைமறைத்துப் புண்ணியஅம் பலவா ணப் புகழ்ப்பேர் தாங்கி. (உஉ)

வேறு.

* இருண்மலத் தழுந்து மெம்மனோர் யாரு மெளிதினி லிறை ஞ்சியே யுய்வான், அருளுருத் தாங்கி யடியர்கள் சூழ வமர்ந்திடு மரு மறை முதலைத், தெருண்மனத் தொளிருஞ் செழுஞ்சுடர்ப் பிழம் பைத் தெய்வவான் கற்பக தருவைக், குருமணி மாடக் கோகழி யா னைக் குணங்குறி கடந்ததற் பரத்தை. (உங)

* பொய்ம்மலி சமயக் குறும்பெலா மடக்கிப் புகழ்மலி சைவ மென் றறையு, மெய்ம்மலி யரசு தழைந்திடு மாறு வெளிவந்த நங் குரு பரனை, மைம்மலி கண்ட மறைத்தினி திருக்கும் வழுத்துதற் கரியதத் துவத்தைச், செய்ம்மலி துறைசைச் செழுநக ரானைத் தே வெலாங் கைதொழுந் தேவை. (உச)

* ஆலினி லிருந்து குருந்தினி லிருந்திவ் வரசினி லிருக்கவந் த வனைப்,பாலினி லிருந்த படுவிடம் நீக்கிப் படர்சுவை யமுதுஊம் பரனை, நூலினி லிருந்த நோன்மைசா லறிஞர் நுவன்றிடும் நுண்ணி ய பொருளைச், சேலினி லிருந்த பொன்னிசூழ் துறைசைச் செழுநக ர்ச் சிவபரஞ் சுடரை. (உரு)

* அடுக்களைக் கிணற்றி லமுதமூழ்த் தெடுப்ப வதுபெறாப் பே தையர் போல, இடுக்கணி லுழலு மெம்மனோ ரியாரு மெய்திடா திழிந்ததற் கிரங்கித், தடுக்கொணாக் கருணை ததும்புமம் மூர்த்தி த னக்குள தன்மையா லின்றும், உடுக்கணத் தோடு முடுபதி யெழுந்த தொத்திட வுதவினன் காசி. (உசா)

* கன்றினைத் தேடிக் கறவைவந் தாங்குக் கடையரேங் கண்[...] ளாற் பருகித், துன்றிய பாசத் தொடக்கினை யறுத்துச் சுகக்கட[...]

நினைத்திடும் வண்ணம், நன்றுகொள் திருவா வடுதுறை யிருந்து நாகைமா நகரினை நண்ணிக், குன்றமில் கோலங் காட்டியாட் கொண்ட குருமணி கருணையைப் புகழ்வாம். (உஎ)

௸ மகாசந்நிதானம் காரைக்காலி லெழுந்தருளியபோது கூறியது.

* செம்மைசேர் துறைசை யம்பல வாண தேசிகன் காரைமா நகரில்,அம்மையார் முன்னா வருத்திய கனியி னாசையா லெழுந்தனன் போலும், மும்மைசா லுலகுந் தொழவினி திருக்கும் மூர்த்தியைக் காணயாம் செய்த, வெம்மையில் தவங்க ளின்னவென் றறியேம் மெய்ம்மையீர் விளம்புமின் னீரே. (உஅ)

பிர்ம-ஸ்ரீ வே. சாமிநாதய்யரவர்கள் மகா மகோபாத்தியாயப் பட்டம் பெற்றபோது கூறியன.

* தேனாக்ஷி செயுங்கொன்றைச் செஞ்சடையான் றிருவடிக்கே சிந்தை யாவுந்,தானாக்ஷி செயக்கொடுத்த தகைமையினான் றமிழ்த்தெய்வ மாகி வந்த, மீனாக்ஷி சுந்தரப்பேர் நாவலவன் கலைபனைத்தும் விரும்பி யென்றும், காணாக்ஷி செய்வேனென் றுறத்திரண்ட கலையாக்ஷி நலமிக் கோனே. (உகூ)

* கலைநாதன் குலநாதன் கற்றவழி நிற்பதற்குக் கட்டாய்க் காட்டும், நிலைநாதன் குணநாதன் நேர்மைமிகு கலைபமுறை நேசித் தூட்டும், நலநாதன் நயவசன நன்னாதன் நாவலர்கள் தங்கட் கெல்லாம் தலைநாதன் தவநாதன் சாமிநா தப்பெயர்கொள் தமிழ்வ லோனே.()

* அருகிருந்திக் கல்வியமு தருத்தியநின் னாசிரிய னவனி தன்னிற், றிருவிருக்கும் புதுக்கோயில் செய்தவனை யொப்பாவான் சீர்த்தி யென்றும், மருவிருக்கும் பழங்கோயில் மான்புறத்தும் புன்னையனை மானா வாய்நீ, இருவருக்கு முயர்வெண்ணில் நின்னுயர்வே யதிகமென வியம்ப லாமே. (ஙக)

* முன்புதித்த காதைவிடப் பின்புதித்த கொம்புறுதி யென்பர் மேலும், அன்புதித்த துரோணரிலும் அருச்சுனனே தனுர்வேதத் ததிக மென்பர்,இன்புதித்த மீனாக்ஷி சுந்தரனார் திருச்செவிபி லீணை பத் ரேங்குங், தென்புதித்த பிரமமதைச் செப்பினோன் திருப்பெயர் ான் திறமை யோனே. (ஙஉ)

* பூவேந்து பாவேந்தைப் புந்திமகிழ்ந் தின்புசெயப் புகுங்கா லன்றேனென், காவேந்து தனத்தைவிடக் கனத்ததியே பெரிதென்று கழறு வார்கள், மாவேந்தி னுலகமெலாங் கோலோச்சு மாங்கிலோ மன்னர் தம்பாற், கோவேந்தவ் விரண்டனையுங் கொண்டநின் புகழ்ப்பெருமை கூறற் பாற்றோ. (கூகூ)

* முன்னவர்கள் புதைத்துவைத்த முழுப்பொருளை யெடுத்தியும் முறைமை போலத், தன்னிகரில் முன்னூலைத் தமிழுலகங் களிதுளும்பத் தரும் நினக்குச், சொன்னமோ கைம்மாறு துதிப்பதோ கைம்மாறு துகளி லாமற், றென்னவோ கைம்மாறெம் மெழிற்சாமி நாதமறை யிசைவ லானே. (கூசா)

* வான்வழங்கு முலகதனில் மதிவழங்கும் பன்னூலை வயக்கியின்னுந், தான்வழங்கி நீடூழி காலமெலாந் தழைத்துவரத் தமியேனென்றும், மான்வழங்கு மிடத்தானை மனம்வழங்கி மொழிவழங்கி வழுத்தா நின்றேன், தேன்வழங்குஞ் செந்தமிழின் றிறம்வழங்கி வருஞ்சாமி நாத தேவே. (கூரு)

ஆகச்செய்யுள் கூகூக.

---

## மு. ரா. கந்தசாமிக்கவிராயர்.

சேற்றூர்ச் சம்ஸ்தானவித்துவான் இராமசாமிக்கவிராயரவர்கள் புத்திராகிய யாம் பால்யத்தில் எமது தந்தையவர்கள்பாலும், திருவாவடுதுறை ஆதீனம் சின்னவகைக்காறபாறு ஸ்ரீமத். நமசிவாயத்தம்பிரானவர்கள்பாலும் கல்விபயின்று உடுமலைப்பேட்டை போர்டுஸ்கூல் தமிழ்ப்பண்டிதராக 10 வருஷமிருந்து அதைவிடுத்து இம்மதுரையம்பதியையடைந்து விவேகபாநு என்ற பத்திரிகையையும், விவேகபாநு அச்சியந்திரசாலையையும் ஏற்படுத்தி நடத்திவருகிறோம். மு. ரா. அருணாசலக் கவிராயரவர்களும், சே. ரா. சுப்பிரமணியக் கவிராயரவர்களும் எமது முற்சகோதரர்கள். திருப்பேரூர்த்திரிபந்தாதி, பவாநி வேதநாயகியம்மை பிள்ளைத்தமிழ், கருமலையாண்டவர் துதிமஞ்சரி, துமணசரித்திரம், அரிமழத்தலபுராணம் என்பன யாமியற்றியவை. கம்பராமாயணம் ஆரணிய காண்டவுரையும் எழுதியிருக்கின்றோம். இப்போது எமக்கு வயசு 39.

சித்திவிநாயகர் துதி.

* சித்தி விநாயகனைத் தென்மதுரை நாயகனை
முத்தி கொடுக்கு முதற்பொருளைப்—பத்தியுடன்

வந்திப்பா ரின்னுமொரு மாதா வயிற்றினின்று
வந்திப்பார் தன்னைமரு வார். (க)

*சிந்தா வளமுகந்து சேருந் திருமதுரைத்
தந்தா வளமுகனைத் தற்பரனை—எந்தாய்
அடியருள்வை யென்றக்கா லவ்வளவே பண்டை
அடியருள்வை யென்பா னவன். (உ)

*அடியா ருளமலரி னன்புத்தே னுண்ணும்
படியாருந் தும்பிமுகன் பாதம்—நெடிதாம்
பவந்துடைக்குங் கூற்றுவனைப் பார்த்து மலர்க்கண்
சிவந்துடைக்கு மீயுந் திரு. (ங)

முருகக்கடவுள் துதி.

*திருப்பரங்குன் றனையன்பாற் சேவிப்பார் வானத்
திருப்பரங்குன் றனை செலுமா—நெருப்பிற்
புழுப்புகுமா கூற்றுவனே பூதங்க ளூன்வாய்க்
கொழுப்புகுமா ரோச்சுமயில் கொண்டு. (ச)

*கன்னங் கரிய திருமான் மருக கனவரைநேர்
பென்னம் பெரிய முலைவள்ளி நாயக பேருலகில்
சின்னஞ் சிறிய னலைகடற் பாய்மரஞ் சேர்கொடிநேர்
தன்னந் தனியன் பரங்கிரி நாதநின் றுள்சரணே. (ரு)

களி.

*மதுரை குடிகொண் டுலகரெலாம் வணங்க விருந்த பித்தர்குரு
மணியாய் வந்த முருகேசர் மட்டுக் கடங்கா வலிபடைத்தார்
கதுமென் றெழுந்து வெறியேறிக் களித்துத் திரிந்தார் அமரரிட்டங்
கண்டங் கருள்வார் பரங்கிரிவாழ் கந்த ரவர்கான் முண்டகமே
துதிசெய் களியேம் அளியோடு சூழ்மி னறக்கஞ் சாவாமே
தொகுத்தவினையொத்திடக்காண்பீர்சுகமாம்அசத்தைவிட்டிடுவீர்
விதியாங் கருவா டுஞ்சேரு மீனந் தீர்மி னன்டமெலா
மேவுங் குழம்பூழ் நலமாகு மென்று விகிற்பே ரின்பமுண்டோ.

சம்பிரதம்.

*அனந்தனை விழுங்குவோ மட்டவரை முற்றுமோ ரங்கையி
லெடுத்து மிசைவோம், ஆழியையு மொருவிர லுறச்செய்வோ நல்ல

சல மார்குவோங் குலகி ரியையும்; மனங்கொளிற் கைலாய வரையை யுங் காட்டுவோம் வானகமு முடன நியலாம், வைகுந்த முங்கையில் வைத்தாட்டி விடுவமம் மானையுற வும்பு ரிகுவோம்;தினந்தினமு நில வுலகி னுவாய் செலச்செய்வோந் தேவர்கோ பதியை யிங்கே, சேர்ந் துபல் லக்குச் சுமக்கின்ற போகியாச் செய்வமிவை யரிய வலவே; கனம்பெறு தனத்தேவ யானையை மணந்துலவு கந்தருமை மைந்தர் மேவிக், களிக்கும் பரங்குன் றினிற்சென் றிறைஞ்சுங் கருத்தொன் றை யன்றி யிலையே. (எ)

தவம்.

*மலைவாயுற் றீர்மனமு மலைவாயுற் றீரே
வாய்ப்பேச்சி லீருமக்கு வாய்ப்பேச்சொன் றுமே
அலையாருஞ் சலத்துறைந்தீர் சலமேகொண் டிருந்தீர்
ஆதவத்தி னின்றீரா தவமேயென் றறியீர்
நிலையாமை யுணர்ந்தீர்நீர் நிலையாமை யானீர்
நேயமிலாச் சடைத்தலையீர் நெஞ்சினிலு முடையீர்
இலையேயிங் கிவற்றாலோர் பயனுமிதோ பரங்குன்
றிருப்பதிதை நொடிப்பொழுது நினைப்பினருள் வருமே. (அ)

சிவபிரான் துதி.

*திருவால வாயிற் சிவனே மடவார்
உருவால வாயிற் றுழலா—தொருவா
தனையே துதிக்க வொருவரமீந் தாற்பின்
வினையே துதிக்கநில மேல். (கூ)

*தன்மதுரை யாகிமுடி தாங்கி மகிழ்வோங்கித்
தென்மதுரை யாளுஞ் சிவக்கொழுந்தே—கன்ம
வருவினையா வற்றையுமே மாற்றியினந் தாயர்
கருவினையா தின்புதவிக் கா. (கo)

*ஆசை யுடையானீ யாதலினா னுயேனை
ஆசையுடை யானென் றகற்றிவிடேல்—ஈசா
பொருணுடு நால்வருக்குப் போதமுணர் வித்த
கருணு கராசங் கரா. (கக)

மீனாட்சியம்மை துதி.

*மலையத் துவச மகரத் துவச
மலையத் துவசன் மகளே—நிலையற்ற

பொய்வாழ்வு நம்பியுனைப் போற்றாப் புலைபேற்கு
மெய்வாழ்வு தந்தருளம் மே. (க௨)

கற்றா மரையரன்பு கண்டா மெனக்களித்துப்
பொற்றா மரையுட் புகுதானன்—னற்றனைப்
பற்றாத வாறுள் பலகழித்த பாவியெனை
எற்றா லருள்வையம்மை யே. (க௩)

உள்ளக் கவலை யொருகோடி புண்டேனின்
வள்ளக் கவலை வளர்கருணை—வெள்ளத்தே
ஓர்திவலை தந்தா லுமையே குறையாமோ
தேர்திவலை மாதாமுதே. (க௪)

சேற்றூர்ச் சம்ஸ்தான கர்த்தரவர்களாகிய ஸ்ரீமத் கனம் சேவகப் பாண்டிய
மன்னரவர்கள் சர்ணபூஷண காலத்தே யெழுதியனுப்பியகவிகள்.

* முற்கன்ன னொருவன்மற்று மொருவனிதி கொண்டுமிகு முதன்மை பெற்றான், எற்கன்ன முதற்றருஞ்சுந் தரதாச வள்ளல்சுதனிவனி ரண்டு, பொற்கன்ன னெனக்கன்ன மிசைச்சொன்ன மணியணிந்து பொலிவுற் றானிவ், வற்கன்ன விறுமார்பன் சேவகப்பாண்டியமகிபன் வாழ்க வாழ்க. (க௫)

* கனமுறுசுந் தரதாச மால்சுதன்சே வகப்பாண்டியன் கன்னமீது, கனகமணிந் ததுவளர்செங் கமலைபுயர் வெண்கமலை கன்ய மிந்தத், தினகரனுல் விளங்குமிவன் செவிவழியேத் தனைகொண்டான் றெரிவோ மென்ன, மனதிலெண்ணிப் பொன்மகிழ்ந்து மருவியதாத் தோன்றுநல மதிவல் லோரே. (க௬)

*சித்திரமன் மதசொருபன் றென்சேறைச் சுந்தரதா ஜேந்த்ரவீதி,எத்திரமேற் சேவகப்பாண் யடின்கன்னங் குத்தியவ ணிட்டான் பொன்னை, இத்தரையிற் கன்னங்குத் தினர்பொன்னை யெடுப்பரிவ்வூ ரிசைவோர் கன்னங், குத்திலங்கு பொன்சேர்ப்ப ரிவ்வரசனீதியையாங் கூற லென்னே. (க௭)

தேவிகோட்டை ஸப்டிவிஷன் ஜமீந்தார் மா-ா-ா-ஸ்ரீ அள. அரு. அரு
அருணாசலஞ்செட்டி யாரவர்கள் மீது கூறியன.

* சந்தானத் தவர்துதிக்குங் கானப்பேர்க் காளிசன் றயவான் ...வாம், சந்தான தருவாகித் தேவைாக ராசுசொய்சி தரம காவ,

சந்தானம் பதியருணு சலமகிபா புண்ணியவுத் தமசி லாக்ய, சந்தானம் பெருகிநின்றன் குடும்பமெலா மெந்நாளுந் தழைக்குந் தானே.()

* கருணா சலதிபாய் கற்றவரைக் காப்பாய்
அருணா சலதியா கத்தாய்—பொருணாளும்
தேவையெனப் பற்பலருஞ் சேர்ந்துதுதித் தப்பெறுஞ்சீர்த்
தேவையர சேயன்பு செய். (கக)

* நிதிபடைத்து மந்திரியா யீசனிரப் பையுமகற்று நீர்மை நோக்கி,மதிகருதுந் தனதனந்த வரனருளாற் பூதலத்து வந்து தோன்றி, அதிவளஞ்சேர் நாட்டுக்கோட் டையுநகரும் பொருந்தியுய ரரசனாகித், துதிபெறப்பொன் னுதவுகின்று னவனருணா சலநாமந் துலங்குங் கோவே. (உ0)

கோம்பி விருத்தம் என்ற நூலனுப்பியதற்காக ஸ்ரீ வெ. ப. சுப்பிரமணிய முதலியாரவர்கட் கெழுதியன.

* உவமானந் தனைநிகருந் தென்னாடு மதற்கணியா யுலவி மேன்மேற், றவமான நெறிவளர்க்கும் வெள்ளகாற் செழும்பதியுந் தமிழுமியாமும், துவமானம் பெருவிழியார் மாரனெனும் பழனியப்ப சுமுகனாலும், சிவமானந் தம்பெருக்கு மென்றென்று பலநாளாச் செயுந்த வத்தால். (உக)

* வந்தவதா ரம்புரிந்தோய் நெல்லைநகர்ச் சிலேடைவெண்பா மாலை நூலைத், தந்தவதா ரகைநாப்பண் மதியமெனப் பலபுலவர் தனிக்கு மாமே, வந்தவதா ரணியிடத்து மாயமெலா மேவுகிர வஞ்சமேற்பு, குந்தவதா ரகனுயிரைக் குடித்தமரர் குடியுடனெங் குடியாண் டோனே. (உஉ)

*பங்கடம்ப மாலையத்தும் பாராட்டு மெனக்குமருள் பாலிப்பானைச், செங்கடம்ப மாலையணி தேவசிகா மணியைபருட் டேனையன்பர், தங்கடம்ப மாலையிரு மாவெனச்சொல் வானையவன் றரப்பூ வந்த, வெங்கடம்ப மாலைமது விழிமொழிசேர் குறமாதின் விரகத் தானை. (உங)

*திருவனந்தற் கனவினிலு மறவாது துதிபுரியுஞ் சீரோய் விண்ணிற், றருவனந்தங் கோடியுருப் பெறினுமிணை மேவாவு தாரக யாய், மருவனந்தங் கியதுவனை மார்புடையாய் கற்றவர்யா வ

முன்போ, தருவனத்த னுமதிப் புறுபுகழ்சுப் பிரமணிய தமிழ்க்
கோ மானே. (௨௪)

*மருத்தப்பா துறைதுழலார் மதனனையாய் நினதுதிரு வாக்காங்
கோம்பி, விருத்தப்பாப் புத்தகமேன் னிடத்த்வந்து பேரின்பம்
விளைத்த தென்றன், கருத்தப்பா வதின்முழுகிக் கிடத்தலினு லதன்
பெருமை கூற வல்லேன், பொருத்தப்பாத் கியம்பலவு மெய்துனி
னைப் போற்பவர்யார் புவியின் மாதோ. (௨௫)

*தேங்கிலவ னுகாநீ ருடைப்புவியிற் றமிழுணர்ந்து சிறப்புற்
றோரும், ஆங்கிலவ நால்வலரு மிகப்புகழு மிந்நாலொப் பாயெங்
நாளும், ஓங்கிலவன் னதன்பெருமை முழுதுரைக்கச் சேடனுமே
யொவ்வா னென்னில், நாங்கிலவ ரெனற்கும்வல்லே மல்லேஞ்சுப்
பிரமணிய நாவல் லோனே. (௨௬)

மதுரைத் தமிழ்ச்சங்கம் அக்கிராசனுதிபதியவர்களாகிய ஸ்ரீமாந் பொ.
பாண்டித்துரைஸாமி யவர்கள்மீது கூறியன.

* திருவிருக்கும் புபசயிலா குடமுனிபோற் றமிழுணர்ந்த செ
ல்வா செம்மை, தருவிருக்கு மறியாத தானுவடி மறவாத தகையாய்
மையன், மருவிருக்கு மணிபனையார் மடல்வரையு மழகாபா வல்லி
ரென்பால், வருவிருக்கு மதுமிடிபோ மென்றருள்வாய் முகவைநகர்
வளர்கோ மானே. (௨௭)

* பெரும்பிரபு வாப்பொன்னுச் சாமிமகி பதிசெய்தவப் பேறு
தோன்ற, வரும்பிரப லாசுகுறு மதிவகுறு வாய்மைமலி வரதா வின்
பக், கரும்பிரசங் கம்புரிவித் தகவிநய மதிபூகா தமிழ்ப்பன் பாடிச்,
சுரும்பிரச நுகர்தளவத் தொடையலணி வாய்பாண்டித் துரைப்பூ
மானே. (௨அ)

* அருந்தவரை யாதனமா தியவற்று லுபசரிப்போ யளியே
யின்பம், பொருந்தவரை யாதனம்பொன் னுடையளிப்போய் வலாரி
யொரு புடையொப் பாய்ப்போ,யிருந்தவரை யாதனகா மின்றமிழை
க் கொள்ளைகொண்டா யியற்பா வாணர், திருந்தவரை யாதனவன்
கொடைக்கெனுமா றித்துவக்குஞ் சிந்தைக் கோவே. (௨௯)

* தன்ளமுத லைபைத்தடிந்த கண்ணன்விழி மலரினுமித் தோ
யின்பந், கொள்ளமுத லாக்கருதிக் கண்ணப்பன் குஞ்சிமலர்

கொண்டோர்க் கன்பா, தெள்ளமுத மெனவினிக்குஞ் செழும்புலவர் கவிபுனையுன் செவியென் வேட்கை, வெள்ளமுத வுரமிந்த வெறுங்கவியும் புனைவதற்கு மேவு மன்னே. (௬0)

* நாலியற்றுப் பொழிந்துபுற மொழிவிலங்கு புகுந்தழிக்க நாவன்முச் சங்க, வேலியற்றுப் பொலிவிழக்குந் தமிழ்க்கூழ்க்கு வச்சிரந்தான் மிளிருந் தோட்டை, கோலியற்று நிழலியநின் றமிழ்ச்சங்க மெனலெவரே கூறார் நீயன், பாலியற்றுந் தயவுதவிப் பண்பனைக்கும் வலியிலியென் பகரு வேனே. (௬௧)

திருநெல்வேலிக்குச் சென்றிருந்தபோது செயதுங்கநல்லூர் வித்துவான்
ஸ்ரீ காந்திமதிநாதபிள்ளையவர்கட்குஎழுதியகவிகள்.

* திருவருட்பா முதலியநற் கவிபலவு மெல்லவருஞ் சிரந்துளக்கிப், பெருவியப்புக் கொளுமாறு பாடிவரும் பாடிவரும் பெரியோய் மிக்க, மருவிருக்குங் கருங்குவளை பொருங்குவளை மார்புடையோய் மனந்துணையம், ஒருவலிலாக் காந்திமதி நாததுதி நாதமகிழ்ந் தொன்று கேட்டி. (௬௨)

* நின்னதுநற் குணமனைத்து மடுத்தடுத்துப் படிப்படியா நிகழ்த்தி னென்னிற், பன்னமதி யூககிரு பாகரகு ணாகர்சம் பன்ன லோலன், நன்னர்மிகு கருமுகிலை யிருநிதியை யைந்தருவை நாளும்வென்று, தன்னைநிகர் தருசோழ சலபோஜ மகராஜ சரசன் மாதோ. (௬௩)

* ஒன்றேநின் குணத்தருளித் தெனக்குனது நன்னேய மூட்டுவிப்பேன், என்றெனப் பலநினைத்து மெத்தனையோ முறைவிகித மெழுதி யுய்த்தான், நன்றார்வத் துடனீண்டு வந்திலனீ காந்திமதி நாதனாக, நின்றார்வத் துடனழைக்குஞ் சிறார்களியா மாகவிவ ணெடுநாட் சென்ற. (௬௪)

* விரைவிலியா னெனதூர்க்குச் செலவேண்டு நினைக்காணும் விருப்பத் தக்கோர், கரையிலைசர்க் கரைகொளளக் கரைநிகருன் கனிவார்த்தை கவிப்பா வுண்ணத், தருதியவண் வருதியுனைக் கருதியுரை யாநிமிடந் தானு மில்லை, பரிதியினும் விளங்குபுக ழொளிபடைத்த காந்திமதிப் பாவல் லோயே. (௬௫)

ஸ்ரீமத் முத்துராமலிங்கசேதுபதி அவர்கள் திருமண
வாழ்த்துக் கவிகள்.

* பலகவிக ளுதவியினு லிராமனன்று சேதுகட்டும் பான்மை தன்னை, யுலகர்மதித் திடலெனெல்லாக் கவிகளுக்கும் வேண்டு

வுதவி மேன்மேற், குலவுநலச் சேதுகட்டிக் கொண்டவனின் பெருமை யெம்மாற் கூறற் பாற்றோ, நிலவுவளந் திகழ்முகவை காக்குமுத்து ராமலிங்க நிருப ரேறே. (கூசு)

* சேதுகட்டி யணிவகுத்துத் தூதுவிட்டுக் கடுஞ்சமரஞ் செய்தே வென்று, நிதுபற்று வில்லறத்துக் குரிமையுற்ற தாசரதி திறனன் றன்றால், சேதுகட்டிப் பவனிவந்து நிதிபொழிந்து மகிழ்ந்தறஞ் செய் சிறப்புப் பெற்றாய், நீதிபற்றிப் புவிபுரக்க வந்தமுத்து ராமலிங்க நிருப ரேறே. (கூஎ)

* சேதுமா தவனருளாற் சேதுபதி யாயினைமுன் றேவர் தேவாஞ், சேதுமா தவனருளுந் திறத்தாலே மலர்த்திருவிற் செவ்வி வாய்க்க, சேதுமா தவனுகித் திகழுமுத்து ராமலிங்க சிங்க மேயச், சேதுமா தவனுமுடு பதியுமுள வரையுமுன்சீர் செழிக்க மன்னே.

க்ஷயரோகத்தால் வருந்தியபோது பொருளாலும் மருந்துகளாலும் பேருதவிபுரிந்து அன்புபாராட்டியவர்களான சேற்றூர் சம்ஸ்தானம் மானேஜர் சி. இராக்கப்பபிள்ளையவர்கள், ஸ்தாநபதி பழசியாண்டி கரையாளரவர்கள், ஐயனூர் கரையாளரவர்கள் இம்மூவர்மீதும் வியாதிதீர்ந்தவுடன் பாடியனுப்பியகவிகள்.

குளகம்.

* கனந்தருமந் தரமேரு வெனுங்கவிகை மருமமுளாய் கவிநூல் வல்ல, அனந்தருமந் தரமதியு நிகர்கல்வி வதனதரா வசைவர் தம்மைச், சினந்தருமந் தரகசிய மாகியபஞ் சாக்கரத்தைச் சிந்தைசெய்து, தினந்தருமந் தாணிபுகழ் வகைபுரிந்து தென்சேறை சிறக்க வாழ்வாய். (கூகூ)

* பிரபந்த மாதிகடி வொன்றுமிலா தெவைபுமுற்ற பெருமமாவிப், பிரபந்த வயகிலப் பெற்றவன்ம ளுளபுனை பெரும்பூ திச்சுப், பிரபந்த வங்கோளா வாபரண வெனச்சேறைப் பிரானைப் போற்றும், பிரபந்த மினத்துமச்சி லேற்றிவர வாற்றிவரு பெரும்பே றுற்றாய். (சo)

* புழுகுமலிக் குழல்கொண்மின்னார் புயத்தணிசாந் தமுமலரு பொருந்து கந்தத், தெழுகுமலிக் கும்படிகள் விருடுவன்று செழுங்

தடங்கா விழிந்த தென்கால், ஒழுகுமலைக் குச்சரியாம் பலகணையிற் றேவர்சந்தி புஞற்றி மேவும், கழுகுமலைக் குமரனிரு கழன்மலரைக் கனவினிலும் கருதக் கற்றேய். (௪௧)

* பன்னகரா திபந்தேவர் புவிபுகழக் கவிகைதரு பாரி சாதம் அன்னகரா திருவுறைபு மணிமார்பா படைகொடைசல் யானை மான பன்னகரா தினமுழுங்கு மொலியமரர் பதியையெட்டிப் பார்க்குஞ் சேறை,நன்னகரா திபனருது வருகவென்றன் பாலென்பா னவில்செ வ்வாயாய். (௪௨)

* முன்புகவி ஞடொறும்பல் வானுரைத் திடவவரை மூடி மேவும், துன்புகவி ஞடியிற்பொன் சொரிகனமே யெதிர்த்தவர்தந் தோன ரய்போ, டென்புகவி ஞய்கழுது பேய்திரியப் பொருவிசயா வென்பா னுற்ற, அன்புகவி ஞன்பெறமன் பாஞரைத்து விளக்கிவி ஊ வாகச் செய்தோய். (௪௩)

* மணைத்தவிராக் கப்பனஞம் புணரிகுழல் விழிவாணி மாஞம் வல்லார், கணைத்தவிராக் கப்பனுவல் பாடிவரு பவர்நவையைக் கருதா தின்பு,பணைத்தவிராக் கப்பனுதுங் கற்பகமே யற்பகமே பயில வாழ் சற், குணைத்தவிராக் கப்பவல வாகுமணு குவளையணி குவவுத்தோ ளாய். (௪௪)

* உருக்கரையா யினுங்கடினத் தொவ்வாது கல்லுமதென் று ரைக்கு முள்ள,வருக்கரையா ரமுன்மெழுகு போலுருக்கித் தெய்வப த்தி மார்க்கத் துய்க்கும்,சருக்கரையா தென்னமுதா வெனுஞ்செய்பு ன் மாலைபல சாற்றி னேயென்,உருக்கரையா வகையுதவி பலபுரிந்து தாயினுஞ்சி றுற்ற மேலோய். (௪௫)

* விருந்தோசை கேட்டவுடன் முகமலர்ந்தின் னுரைபகர்ந்து விண்ணேருன்னு, மருந்தோசை யிதற்கிணையா வென்னுமமு தரு த்திமன மகிழ்வாய் தந்தம், முருந்தோசை வலங்குழலோ வெனுமு மையாள் பாகருக்கு முழச்சோ மன்போற்,பருந்தோசை நித்தியகை வேத்தியக்கட் டளைநடத்தும் பண்பான் மிக்கோய். (௪௬)

* ஒங்குழலு நடுநிகையுநெற் கட்டுமெங்கு முழுஞ்சேறை யுளை யர் முன்புல், லாங்குழலுஞ் சரம்பிடித்துப் பகைப்புரந்த மால்வி

முன் னவனு ரன்பர், சங்குழலும் படிபுகுத்தா தின்புதவி வீடுமரு ளிறைவர் கொள்ளத், தேங்குழலுந் தோசையொடு செய்வித்துத் தி னமுனைவேத் தியஞ்செய் விப்போய். (சஎ)

* வேகமறப் பரியேழான் வெயிற்கொடுமை யாலுடலம் வெது ம்பி மேவும், சோகமறப் பரிதுபுன லுடலில்வெளிப் படுதலலாற் று ய்க்கக் காணேம்,மாகமறப் பரிவுடைய தென்பதெவ னெனநினைந்து வாடு மாந்தர், தாகமறப் பரிமளஞ்சேர் தண்ணீர்ப்பந் தலுமிவணித் தலுஞ்செய் வித்தோய். (சஅ)

* சந்தனந்த னவனடக்குந் தடந்தேரா னிகர்வலவா தழைத்த வாசச், சந்தனந்த னவனலமுற் றிடப்பூசுந் தைபலராந் தானே சேர் வ, சந்தனந்த னவனரினத் தவன்விபக்கும் பேரழகா தவம்பெற் றுட்கு, சந்தனந்த னவனம்வளர்த் தன்புமனைத் திசைநிறைத்துத் த ழைத்து வாழ்வோய். (சகூ)

* வானுதி பதிதரெனு மசுரரைவே ரொடுகளைந்து மைக்கண் ணுமேலே, மானுதி பதிலுரைக்கும் பொருள்களைவெல் தெய்வமின்னை மணந்து வாழ்பெம், மானுதி பதியடியை மறவாதோ யேற்பவர்க்கு வழங்க லாலும்,கானுதி பதியாகி யுறுபழநி யாண்டியெனுந் தமிழ்வ ல்லோனே. (ருo)

* கழநிமலைக் குடவனைசொல் தென்சேறை நகரிலுறை கன்னு கந்தக், குழநிமலைக் குவளைமிகக் கூத்தாடும் பரற்கினிய குமர னை, பழநிமலைக் குழகனடிப் பத்தியுளா யரவுயர்த்த பதகன் றனைத், தழநிமலைக் கும்படிவிற் றெழில்வலிகாட் டிபவநமத் துவசத் தோ னே. (ருக)

* மதிகார முறவிளங்குஞ் சமுகதரா தென்சேறை மன்ன னும் பூபதிகார னையதிருவன் மகிழ்ச்சிபெற வோங்குபரம் பரையாச் செ ய்யும், அதிகாரம் புரிபழநி யாண்டிவள்ளல் தவத்தவன்பின் னுக வந் தோய்,துதிகார னங்கொடுநன் முறைதவறு ஐயனுர்ச் சமுக மாலே.

* மந்தரதா ளுவைவிகரு மணிமார்பா பன்னூலும் வல்லாய் [illegible]ல்லாய், அந்தரதா ருவையனையா பெமருகவிக் குரையாணி யாவாய் [illegible], சந்தரதா வெனக்கவிஞர் போற்றநடு விற்றிருந்த தயாள ராச,

சுந்தரநா சேந்திரன்செய் தாயதவத் தோன்றலெனத் தோன்ற லானேனன். (௫௩)

* முருகுதிரை வாளிமத னெனுமெழிலான் மாயவனே முத லோ ருள்ளம்,கருகுதிரை விடமருந்திக் காத்தபிரான் கழன்மலரைக் கருத்தி லுன்னிப், பெருகுதிரை நரைதவிரு மார்க்கண்ட விகர்சே றைப்பெருமான் வாவி, வருகுதிரை நகுலனெனுஞ் சேவகப்பாண் டியராச மகிமைக் கோமான். (௫௪)

* பிறந்தவிரும் பயனிதெனப் புகழேசித் தலுமுளத்திற் பே ணு வான்றன்,சிறந்தவிரு விழிகவசம் போலவிருந் ததிகாரஞ் செயுமூ வல்லீர், துறந்தவிரு ளகன்றமனத் தாயருக்கு நேயவுமை துணைவர் பாதம், மறந்தவிரு நாமனத்தர் தமைமதியா நாகயமான் மனத்து நல்லீர். (௫௫)

*தன்னைப்பக் கவிர்சடையுந் தொடையுமுளா னடிமறவாத் தகவு ளிரென்,எண்ணப்பக் கவிடயமெ லாமுடிக்குந் தயவுடையி ரெ திர்த்தோர் நெஞ்சை, உன்னப்பக் கவிழ்வனச முகத்திபர்க்கு மார ரொப்பி ரும்பா லன்பால்,வின்னப்பக் கவிதைசில புகலுவனின் பாக் கேட்க வேண்டு மாலோ. (௫௬)

* ஒருவருட மாவெடுத்த முயற்சியினி தாற்றுவிப்பா னுள்ளத் துன்னிப், பெருவருடம் பனிவேனின் மருத்துமுதற் சுகாசுகத்தைப் பேணா தைந்து, தருவருடங் காத்துநம்போ லென்பாலன் பார்பல ரூர் சார்ந்து சாற்றித், திருவருடங் கவர்தயவாற் கருத்துமுற்றப் பெற்றனனிச் சிரமத் தாலும். (௫எ)

* கனவிசையா வகையிரவு மனந்தவின்றி வாயுவுறுங் கதியா வன்றேல், மனவிசையா வெனச்செலுந்து மசகடத்திற் சஞ்சரித்த மான்பி னானும், வனவிசையா பரிகதுலா வனசமுகா தறையதிபா மகிழ்ந்து பல்லோர், பனவிசையான் மிகுதனதா வெனக்கவிசொன் மனமுயற்சிப் பண்பி னானும். (௫அ)

* கற்பலவா வென்னுமின நகைமடவார் நயனமெனக் களு[illegible] வும், உற்பலவா விகளைதிகள் கூவமுதற் புனல்பலவொவ் வா[illegible]

யானும்,இற்பலவா வருந்தலமு தென்னினும்வேன் டுழிக்கிடையா வி யல்பி னானும், நற்பலவார் சேறையிறை நள்ளார்போன் மெலிவுகொ டு நன்று மெல்லே. (௫௯)

* கருப்பமதி மண்டலமுற் றிடுமிளசை மாநகரஞ் சார்ந்தே னக்கன்,உருப்பமதி கரித்தகது மருத்துமுத லவற்றையவற் றொரூஉந் தின் மாறித், திருப்பமதி மயக்கமுட னினைத்திரும லடுத்தனும்வாய் திறக்கும் போதில், இருப்பமதி யக்கமெனும் படிவருந்தி னேனெனவ ரே யிரங்கா ரம்மா. (௬௦)

* இனியாது புரிதுமெனக் கூடலுற்று வில்லிநகர்க் கேகிப் பா லா, கனியாதுய்த் திடுமுதா வெவைவும்வெறுத் தலும்வயித்யர் கைபார்த் தையா, பனியாதுன் னியவெபிலா பாராம லலைந்ததிலிப் பாடுற் றுய்க, வனியாது சற்றுவிட்டா லெமக் கடங்கா நிதையறிய மனக்கோ னென்னு. (௬௧)

* குற்றாலத் திருந்துமற்றும் பற்பலமூ லிகைபாதி கொடுக்கும் வன்மை, பெற்றாலத் தாலிந்தப் பிணிதீர்ப்பா மென்றுரப் பெற்றி யெல்லாம், நற்றாலத் தானுரைத்தாங் கியாளெழுதுங் கடிதமுற்ற காளே யன்புப், பற்றாலற் புதமிதெனும் படிகொடுத்தீர் நமதுதயை பன்னற் பாற்றே. (௬௨)

* வருமாயுள் வேதியனும் வானுலக மருத்துவனும் வணங்க வாழ்நம், குருநாத னெனுஞான பண்டிதன்று ளகபற்பங் குறித்துட் கொண்டே, ஒருநாளும் பத்தியத்திற் கடவாம லிருந்துசுக முற்றே னுந்தம், திருவாரும் பெருங்கருணை யென்றும்வளர் மதிசிகர்த்துச் செழிக்க மாதோ. (௬௩)

எழுதுமைக்குஞ் சந்திரனுக்குஞ் சிலேடை.

* வரைதலைமேற் கொண்டே வருமக் கரமாத்
திரமாமைக் கூடுநன்னுஞ் சேர்பால்—காமாகும்
இந்துசேன டப்பைய வேந்தலே நீகேளாய்
[illegible]செந்தி ரன்றன்னை பே. (௬௪)

பம்பளிமேசைப்பழத்துக்கும் தனத்துக்கும்.

* வாசம் கொடுக்குதலான் மாதோடு மேய்தலினுல்
ஈரத் தினமதா மேறுதலான் — மாரனிகர்
செப்பழகா சண்முகவீ ரப்பமனு பம்பளிமே
சைப்பழமொப் பாகுந் தனம். (௬௫)

வெற்றிலைக்கும் பத்திரிகைக்கும்.

* மேவக் கரமடுக்கு மெல்லப் படிக்கநன் னும்
நாவுதலில் பாகுசுவை யொத்திருக்கும் — பூவுலகின்
வெற்றிலைக்குப் பத்திரிகை மேவுநிகர் கைலாச
நற்சுகுண மேவியமன் னு. (௬௬)

இத்தனிச்செய்யுட் சிந்தாமணியையச்சிடுவித்த பெருங்கொடைவள்ளலாகிய
மூறையூர் ஸ்ரீமாந். பழ. சி. சண்முகஞ்செட்டியாரவர்கள்மீது கூறியகவிகள்.

குடைமங்கலம்.

* உலகுள்ள வெல்லா மொளிர்கரச்சோ மன்போல்
உலகுள்ள வெல்லாமே யொக்கும் — முலையார்
நவமகிழ்சேர் சண்முகமா னற்கவிகை யோங்க
சிவனருளா லென்றுஞ் செழித்து. (௬௭)

பஞ்சகாவியப்பேர்தொனிக்கக் கூறியது.

* அடுத்தபொருட் சிவகசிந் தாமணிமார் புடையா
யைந்தெனுமா சிலப்பதிகா ரம்பகுண முறுவல்
தொடுத்தமணி மேகலைபா நுதலினிமை சொட்டச்
சொட்டமதுக் கட்டியெனச் சொல்வளையா பதியே
மடுத்தவெழிற் குண்டலகே சிவனுவரா தேவ
மாதரனை வாயணைவாய் வணிகர்குல மணியே
கொடுத்தடைந்த புகழ்ராம நாதவள்ளல் குமரா
கொண்மூவென் றோதவரு சண்முகபூ பதியே. (௬௮)

* கன்னியுன்னை விரும்புவது முன்னில்லா வகையாங்
காணுமிடை யின்மைவல்லோர் களிப்பெய்தப் பகர்வாள்
துன்னியவி யில்லையெனச் சொல்வதற்கு நாமே
துணிவேமே கலைமா றுதலை மொழியேல்

பன்னுமுக லிரண்டிரண்டெனுரெலித்துவளை யாடப்
பரிமளமுற் றுவந்துவந்து கலவிசெயின் மகிழ்வாள்
தன்னிகர் தானெனுமுத தாரமுறை யூரோள்
சண்முகசுப் பேரவவ தாரகன மாலே. (௬௯)

* அனங்கசந்தா பம்பொருந்து மங்கையா ளெழிற்கோ
அங்கையா ரிரதியுருவசிபரம்பை யாரிவ்
வனங்கசந்தா ளமுகொடுதே னனிமறந்தா டுயிலா
ளயர்கின்று ளறைந்ததென்னை வடுத்தகுறி சொல்வா
யனங்கசந்தாய் மார்நுமித்தப் பார்த்துமெலி வாளு
ளன்னிவந்தாள் கன்னியஞ்சேர் சண்முகபூ மானே
அனங்கசந்த ரணிமாடை யாடைமணி மேடை
அரும்புலவர் விரும்புவகை தரும்புகழ்கொ ளரசே. (௭௦)

* அன்னமருந் தாய்க்குமட்டு மாசகியா ருக்குமஞ்சும்
அன்னமருந் தாய்க்குமட்டு மாசகியா—தின்னே
மணக்கோலஞ் செய்வான் வரான்முறையூர்க் கோவேல்
மணக்கோலஞ் செய்வான் மதன். (௭௧)

* திருவாக்கு நலம்பலவுஞ் சேர்முறைசை யூர்புரக்குஞ் சீமான் வானிந், கருவாக்கு லாவுகர தலவரத னெந்நாளுந் தன்வா யாற்சொல், ஒருவாக்கு மறுத்துரையான் சிவநேயப் பெருஞ்செல்வ முரியா னெங்கும், மருவாக்கு முல்லைமலர் வனைந்தபுயச் சண்முகவேள் மகிழ்ந்து வாழ்க. (௭௨)

* சந்தப்பா தவனசமோன் னூர்மகுட முறமுறைசைத் தலத்தை யாண்டு, சந்தப்பா தவலருங்கற் பனையமகந் திரிபாகச் சாற்றுவார்கே, சந்தப்பா தவசியங்கண் டவரவர்க்குத் தந்துபுகழ் தழைக்க மேவும், சந்தப்பா தவமுனிநேர் சண்முகப்பார்த் திவனுளனீ தயங்க னெஞ்சே. (௭௩)

* கவிபாழ முடைத்தாக வெவர்சொலினுங் கருத்தறிந்து கழறுமாபூ, கவிபாழ விகர்மதிசேர் சண்முகபூ பாவான கத்து மாதுங், கவிபாழ னுட்டகத்தும் பூதலத்துங் கிடைப்பரிய கனியை நீய, கவி... வையசாத்து வினைபொருந்த வினையிருந்த கலத்த னன்றே. ()

* அரவிந்த மாகுறிபு மானனமு நிகராகு மவளுடன் மாலால்
அரவிந்த மாவெனவென் முலைமீறல் சகியேனென் றயர்வுற் ருடா
யரவிந்த மாவமுது கனிதரினுங் கசக்குதென வருந்தா ளையா
அரவிந்த மாதனையா ளருள்புரிவாய் சண்முகப்பே ரதிப ரேறே.(எரு)

* மாதவா மனவா மிசைகொடு வாழு மார்பனே யெந்தவத் து
தித்த, மாதவா மனவாக் காகமு முரைக்கு மாவலி யுயிர்கொளா
துநிரு, மாதவா மனவா கண்டுகற் கன்டு வசனமுட் கொண்டுள மகி
ழ்வாய்,மாதவா மனவா கிதவா னந்த மகிபனே சண்முக மாலே.(எசு)

* மானங் கொடுக்க முறச்செய்விழி மடந்தை யினிமேற் புருடாபி
மானங் கொடுக்கம் வேண்டாமெம் மானே யென்பண் மனைமிகவி
தானங் கொடுக்கந் தளரமுலை தனைப்பார்த் தயர்வ [illegible]
தானங் கொடுக்கச் சலியாத தருசண் முகபூ பதிமாலே. (எ[illegible])

*தேங்கரும் புகைக்கு மின்மொழி பவளஞ் செவ்வித மிளமு
லை யிரண்டு,கோங்கரும் புகைக்கு நிகர்செழுங் கமலங் கோகில மிசை
மிகு மணத்த, தாங்கரும் புகைக்கு மைக்குழ லழகாந் தையலை வெ
ன்லிலா வானப், பாங்கரும் புகைக்கு முன்புவந் தனைவாய் பாண்
டிய சண்முக மாலே. (எஅ)

* வண்டல மினத்துங் கவினையாட் டயர்த்த மங்கைமேன் மத
ன்கணை சிறிக், கொண்டல மினத்துச் சென்றசெய் யாக்கக் குளிர்
மதி கொளுந்தமெய் சோர்ந்தாள், பண்டல மினத்து வாதல மந்த
பாவையிற் சிறந்தவ ளிந்த, மண்டல மினத்தும் புகழ்ந்திட முறை
யூர் வாழ்தரு சண்முக மாலே. (எகூ)

* பானலங் கடுக்கு தையம்புவா ளனைய பார்வைசொன் முழு
வது மதுரத், தேனலங் கடுக்கு மமுதமொவ் வாகா தெண்ணிலாச்
சிறுபிறை யாகக், கூனலங் கடுக்கு நுதலிவட் கிணையிக் குவலை
யத் தில்லைவந் தனைவாய், எனலங் கடுக்கும் புனம்புகு செவ்வேட்
கிணைபெறுஞ் சண்முக மாலே. (அ0)

* முடிக்தரசம் [illegible]கமுலை முகைபமுந்தப் பகைமதவேள் முடி
க்குமேவாற், முடித்[illegible]சம் போவிந்தத் துயர்தவிரா யென்பள[illegible]
துந்தேம் பாகும், [illegible]ரசம் போலுமுரை வழங்கவளை முழ[illegible]

வினை மருவிச் செவ்வாய், கடித்தரசம் போதுகுழி விழியவட்சேர் சண்முகசிங் கார மாலே. (அக)

* மருவடிக்குங் குழல்வனிதை தும்புருநா ரதருமுள மயங்க வேதம், புருவடிக்கு மமுதமென மீட்டியிசை யூட்டுவள்வேள் போட்டி யாலுன், திருவடிக்கு வந்தனமுஞ் செய்துபுக லென்றனடித் திக்கு மின்பந், தருவடிக்கு முழுதுமிவட் கிணையிலைசேர் சண்முக வித் தகசி மானே. (அ௨)

*தனங்கலக்கந் தரங்கமெனுந் தையலவண் மையல்வலை தன்னிற் பட்டேன், மனங்கலக்கந் தரவாரா முறைசைநகர்ச் சண்முகபூ மான்முன் ருபர், முனங்கலக்கந் தரமடுத்துக் கெஞ்சியதெல் லாமற [illegible]தாற்கண், டினங்கலக்கந் தரணிமிசை யுகுத்திருக் கின் றேன்சகியே செய்வ தென்னே. (அ௩)

* மிகத்திருக்கி யானவழி யேநடந்து முறைசைநகர் வேளை யெங்கெஞ், சகத்திருத்தி யானவனெஞ் சகத்திருக்கப் புரியாத தைய லிர்வஞ், சகத்திருத்தி யானவனந் தனக்குவரே னெனச்சொலிவி சனித்தாள் கோக, னகத்திருத்தி யானவலனாகியசன் முகமகிபா நலஞ்செய் வாயே. (அச)

* தாசரதி காந்தமுதற் றலைவனென மருவலரைத் தகர்ப்பா னேவு
மாசரதி காந்தவரை வளர்புகழ்சேர் சண்முகபூ மாவென் மங்கை [ள்
நேசரதி காந்தன்மலர்க் கணைக்கிடைந்து நிலவுவர னினைந்து சோர்வ
வாசரதி காந்தனுரு வகையணைந்து முத்தமிட்டு மருவத் தானே. ()

* திருவிவனை யாநிகர்வள் சேடியுமா காண்மலரே சிந்தை யுள்ளு
டுருவிவனை யாதிநடு வுறப்புரிந்த தொருகோட்டை யுண்டு கன்னி
ருருவிவனை யாஞ்செவிய ளுறுதுயர மகற்றுதற்குன் னகலத் தாரே
கருவிவனை யாபதிநா லையுந்தெளிந்த சண்முகசிங் கார வேளே. (அ௬)

* கனத்துவரை யெனப்புடைத்துக் களபமணிந் ததன்மருப் பைக் கடிந்து மீறித், தனத்துவரை மதியாத [illegible]ரியதனக் காரியொரு தைய லிந்தத், தினத்துவரை யுனைநினைந்து [illegible]பங்குகிறுன் மயங்கு [illegible]டிருவை யொப்பாள், மனத்துவரை [illegible]ணைவாய் முறைசை [illegible]சண்முகமா மகிப மாலே. (அ௭)

* சுந்தரிக்குஞ் சாமிமுதற் றோகையர்க்குஞ் சிறந்தவன்மெய்ச் சோர்ந்தை யம்பால், அந்தரிக்குஞ் சாமியெனச் சல்லடைக்கண் ணுய்த்தனித்தோ ரறைக்குள் ளேவ, நிந்தரிக்குஞ் சாமினிக்கு முன்பெயர்கேட் டதுமருந்தாத் தேகத் தாவி, யுந்தரிக்குஞ் சாமியெல்சேர் முறைசைநகர்ச் சன்முகமா லுவந்து சேரே. (அ௯)

* பஞ்சவிலக் கணமுணர்ந்த பாவலரம் தறியாத படிபொன் னீவான், புஞ்சவிலக் கணம்புனையுஞ் சிவநேயச் சன்முகமெய்ப் பூமான் கூடிக்,கொஞ்சவிலக் கணங்கனையார் கூற்றிகழ்ந்தாய் சேற்றிகழ்ந்த கொடியன் கையில், வஞ்சவிலக் கணம்பொழியு மலர்துளைப்ப வாடுநீநான் வகுப்ப தென்னே. (அக)

* புருவத் திவமு முகத்திவமும் பொருளிற் பானை மெனக கோன்மகன், கருவத் தினமு மெதிர்த்துவரக் கடவன் போலா மிந்த மங்கைப், பருவத் தினமுன் னவர்தவத்தாற் பாலித் தனன்று ரென் றுரைத்தாள், மருவத் தினமும் வந்திடுவாய் வளர்சன் முகபூ பதிமாலே. (கூ0)

* கூட்டி லடையா வஞ்சகத்தின் குஞ்சே பாடேன் னினும் வினை, பீட்டி லடையா லுனக்கிந்த விதமென் னெனினு முரையாளுன், விட்டி லடையா ளமுங்குணமும் வினவி மகிழ்வாள் காணிந்த காட்டி லடையா ரும்பரவு நயசன் முகபூ பதிமாலே. (கூக)

* மணக்கந் தரமாங் கரியகுழல் வனிதை யுடனே நினக்கென்ன பிணக்கந் தரமா தருநிகராப் பேதை யலவா பெட்புமிக இணக்கந் தரமா ருனக்கிவள்போ லெவ்வணி யணிவாய் கண்ணலரும் வணக்கந் தரமா தவன்போல வளர்சன் முகபூ பதிமாலே. (கூஉ)

* பலசந் தான தருவென்னும் படிக்குப் படிக்குங் கவிக்கருள்வான் சலசந் தானங் கொளுமடவார் தமது பதியென் றறவெண்ணித் திலசந் தானன் குபர்முறைசை செழிக்கப் புரந்து சிறந்துகுது குலசந் தானம் பெற்றுவங் குளிர்சன் முகபூ பதிமாலே. (கூங)

* தனத்தந் த க மென்றாடித் தலையு மறக்க முலையுமிடைச், சினத்தந் தவ முறைப்புடைக்கச் செய்யு மதவே ளெய் மலர், மனத்தந் தன ருனிக்கலந்த வகைபே நினைவன் வி

முனம், தினத்தர் தனத்தங் கரமடுத்துன் பிச்சன் முகவிற் பன மாலே. (கூச)

* இனத்தை யனத்தை விணேமுத லிசையை வசையை மறந்துபல தினத்தை யனத்தை யமுதிணேச்சத் தித்துக் கழித்தா ளணேபழித் தாள், கனத்தை யனத்தை யேந்துநெடுங் கரத்தன் வரினு மினங் காள்யென, வனத்தை யனத்தை யம்பனென வருசன் முகவிற் பன மாலே. (கூரு)

* அருந்த வருந்தத் தவத்தைவிடுத் தடுக்கு மயிலா ளொருதுளிபால்
அருந்த வருந்தக் குமட்டிமன மயர்ந்தாள் கலேயுங் கலேயுமுடல்
வருந்த வருந்த மதலகிரி வளர மலரே மதன்குனிக்க
வருந்த வருந்தச் சகிப்பாளோ வாசன் முகவிற் பனமாலே. (கூசு)

* பரும்பா கரும்பா மாமுலேயார் படையாய் கொடையா யென் றுசொலி, இரும்பா கரும்பா ராவெனுநெஞ் சினரைத் துதியா தெ மையழைக்குக், கரும்பா கரும்பா முழுதேற்றுக் காத்துக்கனவட் டத்தையுந்தி, வரும்பா கரும்பார்த் துவக்கவிசை வளர்சன் முகவிற் பனமாலே. (கூஎ)

* வடுத்துப் படுத்துப் பார்த்துமிக வணங்கும் விழிவாய் மாத ணேயிற், படுத்துப் படுத்துப் புரண்டுபதை பதைத்துத் துடித்து வா டுவேடாய், அடுத்துப் படுத்தும் பாடுசிறி தலவே நிலவே வந்திடுமுன், எடுத்துப் படித்துள் ளியங்தொடைதா வெழிற்சன் முகவிற் பன மாலே. (கூஅ)

* அஞ்சங் கஞ்ச நடைமுலேயா மணியார் வதனஞ் சந்திரவிம்
பஞ்சங் கஞ்ச மானகளம் பாரிற் கிடையாப் பாவையிவள்
கொஞ்சங் கஞ்சம் பாற்றுதயர் கொடிது நெடிது கடிபுரிந்த
வஞ்சங் கஞ்ச னுயிர்கொள்வல வாசன் முகவிற் பனமாலே. (கூகூ)

* திருத்தந் திருத்தன் னமுநிகராத் தெரிவை பின்னர்த் தெரி வைநிற்கே, பொருந்தந் திருத்த வருளு...கிப் போது கிடைத்த தாலணேந்து, கருத்தர் திருத்த லதிமேன்...ம கண்டாய் பண்டாய் ...லகவிக்கும், அருத்தர் திருத்த முறப்புகல்...ர்க் கருள்சன் முகவிற் ...மாலே. (க00)

* அனவா கனவா ரணவாய னமைப்போ விமைப்போ தைந்துகமா
நனவா கனவா வெனமயங்கு நங்கை முனநீ புரிகலவி
யினவா கனவா ரியிற்பெருக வென்பா லன்பா வீசைத்தனள்சேர்
மனவா கனவா னெனுமுறையூர் வளர்சண் முகவிற் பனமாலே.(கoக)

* புடைத்துப் புடைத்துத் திரண்டுருண்டு பூரித் தெழுந்த வடவரையை, உடைத்துப் புடைத்துத் துள்படுத்த வோங்கு முலையாள் கைரவவாய்க், கிடைத்துப் புடைத்து நல்லமுதங் கிட்டி யணைவா யொட்டலர்தம், படைத்துப் புடைத்த வெலுந்திறற்பூ பதிசண் முகவிற் பனமாலே. (கoஉ)

* முருந்தா திருந்தா மலியாநேர் முறுவற் கெனுமா திரவுவிழி
பொருந்தா திருந்தா ளிலையர்துயர் பூண்டார் வேண்டார் பழிபுகன்றார், வருந்தா திருந்தாழ் வசுற்றவிறை வருமென் றுரைத்து வந்தலனி,தருந்தா திருந்தா ருயிருதவுந் தமிழ்ச்சண் முகவிற் பனமாலே.

* உருவம் பருவங் குணங்கல்வி யுண்மை நேய முடையவன்மேல்
மருவம் பருவ மதன்விடுத்தான் மற்றலை துரைக்கத் தோழியரோ
பெருவம் பருவந் துனியுநிற்கும் பெட்டுப் பிணக்கே புரிவர்மத
கருவம் பருவண் டலர்செய்துயர் களைசண் முகவிற் பனமாலே.(கoச)

* கோதிக் கோதி முடித்தாலுங் குலையுங் குழலு முன்மையொரு
தூதிக் கோதி யனுப்பெனினுஞ் சொல்லாள் செல்லாள் மதன்கரத்து
மீதிக் கோதி னமுங்கோடி விசிகம் பொழியு மடவியர்தஞ்
சாதிக் கோதிமம்போல்வாள் தமிழ்ச்சண் முகவிற் பனமாலே. ()

* தருமலைக்கும் போதனைய கரதலதி யாகவளி தவழுஞ் சிந்த, திருமலைக்கும் போதகமாந் திமிரமுற வருமதிக்குந் தியங்கி மேவும், பொருமலைக்கும் போதிடா வகைதடுக்க விழிவாயாற் புகன்றாள் தென்பாற், திருமலைக்கும் போதயவேர் சண்முகபூ பதியேநீ சேர்ந் தாள் வாயே. (க

*தனக்கவலைத் தருசிலத லுயிர்த்துணைவி மூவெர்ன்பால் றனை யரற்கொள், மனக்கவலை துடைத்ததிரு மாலளித்தான் மாலளிக்க வருந்திக் கொங்கை, கனக்கவலை யாலுமதி யாலுமதி மிகக்கலங்குங் கன்னி யாமிம், மினக்கவலை களிப்புறவா முறைநகர்ச் சண்முகப் பேர் மேவுங் கோவே. (௧௦௭)

ஷை பிரபுவவர்கள் திருக்குற்றாலத்திலிருக்கும் போது கூறியன.

* திடவருவி யாமகனை வென்றவெழிற் சண்முகரா ஜேந்த்ரா திவ்ய வடவருவி யாடிவலம் புரிவிதி வலம்புரிந்து வந்தாங் காக்கக் ...ளிகுற் றாலலிங்க ரினிநம்மைக் கருவி னூடி கூடவருவி யாருலகத் தெந்நாளும் பெருமகிழ்ச்சி நல்கு வாரே. (௧௦௮)

* சங்கநிதி பதுமநிதி தேனுசிந்தா மணியரிசந் தனங்கா ராக அங்குளவா றவைக்கிணையிங்கெவல்தேற்றுஞ் சண்முகப்பே ரரசே வெள்ளைத், திங்களனி திரிகூட வடவருவி யுடல்குளிரச் செய்தாங் குன்வாய், இங்கிதவா சகவமுத முளங்குளிர்வித் ததுமகிழ்ச்சி யிசைந்த திங்கே. (௧௦௯)

* துரும்பலவிற் கண்டமங்கை செங்கைகரும் புருவமது குனிவி னின்பம், உறும்பலவி சாமுதலாப் பாடுவதி லுருவசியு மொவ்வாண் முல்லை, துறும்பலவிக் கிணையுமொழி முருகனுக்குங் கிடையாத தோகை கண்டாய், வெறும்பலவித் தையலர்போ லினையலனை சண்முக செவ் வேட்கோ மானே. (௧௧௦)

* மாகவா னரம்பையுரு வசிமுதலோர் சம்பகக்கா மலரைக் கொண்டு, போகவா னரம்பையச்சென் னைந்தருவின் றணரொடித்துப் புகுங்குற் றாலத், தேகவா னரம்பை... வியர்விரும்புஞ் சண் ...கரா சேந்த்ரா நீயே, யோகவா னரம்பை...நிதம்பமெனும் திரு ...ஷை யோக வானே. (௧௧௧)

* கவித்துவசங் கரம்பிடித்து நாற்றுவரைக் கூற்றுவரைக் காட்டு மோதுங், கவித்துவசங்கரதிபகன் கழல்பணியுந் தருமியுளங் களிப் பத்திட்டுங், கவித்துவசங் கரவருள்வா யெனச்சிவன் முத்திபுரங் கலந்து வாழ்மோக், கவித்துவசங் கரவிலன்பு களிப்புறச்செய் சண் முகவேள் களித்து வாழ்க. (௧௧௨)

* கரும்படிக்க மெனவினிக்குங் கற்பனையுஞ் சொற்சுவையுங் கமழும் பாயா,வரும்படிக்கக் கேட்டுமன மகிழ்ந்தளிக்குஞ் சண்முகப் பேர் வள்ள லிந்த, இரும்படிக்க ணிறுமாப்பா லெண்ணலரைத் தின் னமுட னெதிர்த்துக் கையிற், பெரும்படிக்கந் தனையேந்தி வரும் படிக்கங் கங்குவெற்றி பெறுபூ மானே. (...)

குளகம்.

* தினகரனை மாமதியைக் கனலேவிலோ தனமாக்கொள் சிவனை நற்செக், தினகரனை யின்றவனைத் திரிசூல மழுவுடக்கை திகழு மா னேங், தினகரனைக் கரசரணு தியவுருவங் களிற்சிறிது சிறிதுற் றேமுங், தினகரனை கருப்பமிசை யுருப்பவியா தெமைப்புரக்குங் தேவ தேவை. (௧௧௪)

* சேற்றுவசங் கரங்கொண்மதற் பொடித்தவகூற் றுவனுமு னங் திடுக்கிட் டோடுங், கூற்றுவசங் கரவாம தேவபவ வினைதீர்க்குங் குளிர்ந்த கங்கை, யாற்றுவசங் கரவிலன்பு கொண்டவவென் றழைப் பவர்மு னவிர்வெண் டிங்கள், போற்றுவசங் கரவணிந்த செவியுட னே காட்சியருள் புரிபெம் மானே. (௧௧௫)

* ஒருபோது மறவாது துதியோது சண்முகப்பே ருரவோன் நாவி,யிருபோது கிகர்விழியார் மடலெழுது முருவமத னியற்பா வல்லோர், வருபோது ... மொழியா லவரவர்க்குவேண்டுவன வழங் கி வைந்து,தருபோது ம...னுக் குவமையென மேவுபுகழ் தழைத்து வாழ்க. (௧௧...)

* சகமேற் பொருளுந் றவர்பலர்வஞ்
சகமே பூண்டு நாடொறுமிச்
சகமே பேசிப் பலிவாயா
சகமே புரிவார் தமக்குக்க
னகமே மணியே யறுசுவைப்போ
னகமே தருவா ரன்னவைபொன்
னகமே யெனினுந் தளிக்கோக
னகமே நிகருன் கரதலகற்
பகமே விரும்பி நின்கடையம்
பகமே நோக்கி வள்ளியர்தி
[illegible]மே நிகருன் புகழேஞா
பகமேற் கொள்வார் பாவலர்க
முகமே லோங்கு முறைசையிற்ச
முகமே கொண்டு சற்சனர்ச
முகமே மருவி நலம்புரிசன்
முகமே லவனி வாழியவே. (கக௭)

* மலையா சலத்து மாதவன்க
மலையா ளுபத்தன் பலிசெயும்வி
மலையா ரிடத்தன் மயிலூர்செம்
மலையா கூர்தி யனைத்தருவின்
மலையார் கரத்த னடியவர்விம்
மலையா குலத்தைத் தவிர்த்திடவ
மலையார் துதிகொள் பவனடியை
மலையா தன்பிற் பணிந்திடுவோய்
கலையா னிரம்பு மதிமுகவற்
கலையார் முனிவர் வேதியர்கள்
கலையா வையுந்தேர் புலவரொடொக்
கலையா தரிப்போய் முல்லைபலங்
கலையா ருவி நிகர்கொள்விலங்
கலையா ருவமைப் புயமணிமே
கலையா தியநா லுணர்ந்துமனா
கலையா தொளிர்சன் முகபதி (கக௮)